# புதுமைப்பித்தன்

# கவிதைகள்

தொகுத்தவர் :

ரகுநாதன்

ஸ்டார் பிரசுரம்

திருவல்லிக்கேணி : 60, மேலக்கோபுரத் தெரு
சென்னை-5. : மதுரை.

# பதிப்புரை

தமிழ் மொழி பல்லாயிரக்கணக்கான வருடங்களாகப் பல துறைகளில் புகழுடன் வளர்ந்து வந்திருக்கிறது. அவற்றுள் கவிதைத் துறை மிகக் குறிப்பிடத்தக்க வளர்ச்சி பெற்றுள்ளது. சங்க கால முதல் இன்றுவரை எத்தனையோ தரப்பட்ட கவிதை முறைகள் தமிழ் நாட்டில் தோன்றி வளர்ந்து வந்துள்ளன. அந்தக் காலத்திற்கும், கவிஞர்களின் ஆற்றலுக்கும் அவர்கள் ஏற்றுக்கொண்ட கருத்து, பாவம் முதலியவற்றிற்கும் ஏற்றவாறு பாவினங்களை இயற்றி வந்தனர். இவ்வாறு வளர்ச்சி பெற்று வந்த கவிதைத் துறையின் ஒரு கிளைதான் புதுமைப்பித்தன் கவிதைகள்.

இந்தத் தலைமுறையில் தமிழ் மக்களது பெரு மதிப்பையும் பாராட்டுதலையும் பெற்றவர் புதுமைப்பித்தன். அவரது சிறு கதைகள் தமிழ் மொழியின் பெருமை மிக்க பொக்கிஷமாகும்.

சிறு கதை இலக்கியத்தில் தமிழுக்குப் பெருமை தேடித்தந்த புதுமைப்பித்தன் கவிதைத் துறையிலும் புதுச் செல்வம் தேடித் தந்திருக்கிறார்.

அவ்வப்பொழுது பத்திரிகைகளில் வந்த கவிதைகள் பல. வானொலி நிலையத்தில் ஒலி பரப்பப்பட்டவை சில. இவை தவிர புது மைப்பித்தனால் எழுதப்பெற்ற கடிதங்களி லும், சிறு சிறு நறுக்குகளிலும் காணப்பட் டவை பல. அவற்றை யெல்லாம் தேடிச் சேகரித்துத் திரட்டிக் குறிப்புக்களுடன் நமக்குத் தருகிறார் ரகுநாதன். தமிழுலகம் ரகுநாதன் அவர்களையும் நன்கு அறியும். புதுமைப்பித்தனின் உள்ளப் பண்பையும் இலக்கிய சிருஷ்டியின் சூக்ஷ்மத்தையும் நன்கறிந்த ரகுநாதன் எழுதியுள்ள முன்னு ரையும் தமிழ் மக்களுக்குப் பெரிதும் பயன் தரும் என்று நம்புகிறோம். புதுமைப்பித்தன் கவிதைகளைத் தொகுத்துக் குறிப் பெழுதி நல்ல முறையில் வெளிவருதற்குப் பேருதவி புரிந்த ரகுநாதன் அவர்கட்கு எங்கள் நன்றி.

இதுவரை வெளிவந்துள்ள புதுமைப் பித்தனின் நூல்கள் தவிர இன்னும் வெளி வர வேண்டியவை பல உள்ளன. புதுமைப் பித்தன் நாடகங்கள், விமரிசனங்கள், கடிதங் கள் முதலியனவும் மீதமுள்ள கதைகளும் தொடர்ந்து வெளிவருமென்பதை மகிழ்ச்சியு டன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

இடைவிடாது எங்கட்காதரவு காட்டி உற்சாக மூட்டிவரும் தமிழ் மக்கட்கு எங்கள் நன்றி கலந்த வணக்கம்.

**கண. இராமநாதன்,**
பதிப்பாசிரியன்.

நவபாரத் பிரஸ், சென்னை-1.

# பொருளடக்கம்

# முன்னுரை

கவிதை என்றால் என்ன?

'எதற்கு இந்தச் சலித்துப் போன பழங்கேள்வி?' என்று முணுமுணுக்கும் குரல் குறுக்கிட்டு வழிமறிப்பது எனக்குக் கேட்கத்தான் செய்கிறது. எனினும், புதுமைப்பித்தனின் கவிதைத் தொகுதிக்கு முன்னுரை எழுதப்புகும் நான் இந்தக் கேள்வியை மீண்டும் எழுப்பத்தான் வேண்டியிருக்கிறது; அதைப் பற்றி என் அபிப்பிராயத்தையும் ஓரளவு சொல்லத்தான் வேண்டியிருக்கிறது.

ஏன் என்றால், புதுமைப்பித்தனின் கவிதையைப் பற்றி இரண்டு விதமான தப்பபிப்பிராயங்கள் தமிழ்நாட்டில் உண்டு; அவற்றைத் தெளிவு படுத்தாமல் புதுமைப்பித்தனின் கவிதையை அறிமுகப் படுத்தி வைக்க முடியாது.

அவை என்ன?

புதுமைப்பித்தனைச் சிறந்த சிறுகதை ஆசிரியராக இன்று தமிழுலகம் ஏற்றுக்கொண்டிருக்கிறது. ஆனால், அவரைச் சிறுகதை ஆசிரியராகவே ஏற்றுக்கொள்ளத் தயங்கிய, மறுத்த இலக்கிய வர்க்கமும் தமிழகத்தில் இருக்கத்தான் செய்தது.

சிறுகதை உலகில் புதுமைப்பித்தன் சாதித்தது என்ன?

சிறுகதை என்ற இலக்கிய உருவம் மேலை நாட்டிலிருந்து நாம் இறக்குமதி செய்துகொண்ட சரக்கு. சிறுகதை என்பதற்கு இதுதான் இலக்கணம் என்று மேலை நாட்டாரும் இலக்கணம் வகுக்கவில்லை. கதாசிரியனின் மனோபாவத்துக்குத் தக்கவாறு பற்பல சிறுகதை உருவங்கள் அங்கு கிளைத்தன. பதினெட்டு, பத்தொன்பதாம் நூற்றாண்டிலிருந்து மேலைநாட்டு இலக்கிய கர்த்தாக்கள் பல சிறுகதைகளை எழுதி நடைமுறையில் அமைத்துக் கொடுத்த அனுபவ சித்தாந்தம் தான் சிறுகதையின் மரபிலக்கண

மாக அமைந்தது. எனினும், வேறு பல சிறுகதை உருவமரபுகளும் தோன்றி வந்தன ; வருகின்றன. மேல்நாட்டு முறையைத் தழுவி, தமிழில் சிறுகதைகளைப் படைத்த முதல்வர் வ. வெ. சு. அய்யர் தாம் என்றாலும், புதுமைப்பித்தன்தான் சிறுகதைக்கு பல புதுப் புது உருவங்களைத் தந்து, சிறுகதைக்கு இலக்கிய உலகில் சிறந்ததொரு ஸ்தானத்தை, அந்தஸ்தைத் தேடிவைத்தார். சிறுகதை உலகில் புதுமையையும் புரட்சியையும் உண்டுபண்ணினார். புதுமைப்பித்தனின் சிறுகதைகள் வெளி வந்த காலத்தில், அவற்றை வரவேற்றவர்களும் உண்டு ; புறக்கணித்தவர்களும் உண்டு.

மணிக்கொடி பரம்பரை என்று சொல்லிவந்த எழுத்தாளர்கள், அதாவது ஆங்கிலங் கற்று மேல்நாட்டு இலக்கிய பரிச்சயம் பெற்று அதைப்போல் தமிழிலும் புதுமையான இலக்கிய உருவங்களைப் படைத்து வந்தவர்கள் புதுமைப்பித்தனின் சிறுகதைகளின் உருவ அமைப்பை வரவேற்றுப் புகழ்ந்தார்கள். அதே சமயத்தில் தமிழ் இலக்கணத்துள் கூறப்படாத எந்த இலக்கிய உருவத்தையும் தெரிந்துகொள்ளும் விருப்போ, ஒப்புக்கொள்ளும் திராணியோ, புரிந்துகொள்ளும் திறமையோ அற்ற இலக்கியச் சநாதனிகள் புதுமைப்பித்தன் கையாண்ட உருவங்களைக் கண்டு, "கதையா இது? தலையுமில்லை, வாலுமில்லை!" என்று கூறி, அவற்றைப் புறக்கணித்தார்கள். எனினும் புதுமைப்பித்தன் கையாண்ட சிறுகதையின் உருவ விஸ்தாரங்கள் அவர் காலத்திலும், அவருக்குப் பின் இன்றும் பல இலக்கிய கர்த்தாக்களுக்கு ஆதர்ச ஜோதியாய் நின்று நிலவுகின்றன. இன்றுவரை தோன்றியுள்ள சிறுகதை ஆசிரியர்களில் புதுமைப்பித்தன் தன்னிகரில்லாத் தலைவனாக விளங்குகிறார் என்ற உண்மையை இன்று யாரும் மறுக்கமுடியாது. இந்த உண்மை சிலருக்குக் கசப்பானதாயிருந்தபோதிலும, இதை அவர்கள் மென்று விழுங்கித் தின்று தீர்க்கவேண்டிய நிர்ப்பந்தத்துக்கு ஆளானதையும் சமீபகால நிகழ்ச்சிகளில் நாம் கண்ணாரக் கண்டிருக்கிறோம்.

புதுமைப்பித்தன் சிறுகதைக்கு எப்படிப் புதுப் புது உருவ அமைப்புக்களை உண்டாக்கித் தந்தாரோ, அதுபோலவே அவர்

தாம் எழுதிய கவிதைக்கும் புதிய உருவ அமைதியை உண்டாக்கித் தந்திருக்கிறார். இந்த உருவ அமைதியையும் மறுமலர்ச்சி எழுத்தாளர்கள் வரவேற்றார்கள்; அதேமாதிரி, தமிழ்ச்செய்யுள் இலக்கணத்துக்குப் புறம்பானதாக, அவரது உருவ அமைப்பைக் கருதும் பண்டிதர்கள் அவரது கவிதையின் உருவ அமைப்பை, செய்யுள் உருவமாக ஒப்புக்கொள்ளவில்லை; வரவேற்கவில்லை.

மணிக்கொடி பரம்பரை எழுத்தாளர்கள் வசன இலக்கியத்தைப் பொறுத்தவரை ஓரளவு வெற்றியும் தெளிவும் பெற்றவர்கள்; ஆனால் கவிதை இலக்கியத்தைப் பொறுத்தவரை தமிழர்க்கென ஒரு மரபும், பேரிலக்கியங்களும் உண்டு என்பதை உணராதவர்கள்; உணர்ந்தும் பொருட்படுத்தாதவர்கள். எனவே தான் அவர்களில் சிலர் வசன இலக்கியத்தில் சிறுகதையைப் படைத்தது போல், வசனத்திலேயே கவிதையையும் படைக்கும் 'புதுமை'யைத் தமிழுக்குக்கொண்டு வந்தார்கள். ஆனால் அவர்கள் இயற்றிய 'வசனகவிதை'ப் புதுமை இன்று இருந்த இடம் தெரியாமல் போய்விட்டது. எனினும் அந்த எழுத்தாளர்களில் சிலரும், அவர்தம் முயற்சியை ஒட்டித் தாமும் 'வசனகவிதை' இலக்கியம் படைத்து வந்த எழுத்தாளர்கள் சிலரும் புதுமைப்பித்தனின் புதிய கவிதையைக் கண்டு, அதன் உருவ அமைப்பைக்கண்டு, 'இதுவே வசன கவிதையின் வெற்றி. வசனத்திலும் கவிதை இயற்ற இயலும் என்பதற்கு புதுமைப்பித்தனின் கவிதையே தக்க சான்று. புதுமைப்பித்தன் கவிதையில் இலக்கண அமைதி இல்லையே. எனினும், அது கவிதையாக விளங்கவில்லையா?' என்று கேட்கிறார்கள். புதுமைப்பித்தனின் வெற்றியைக் கொண்டு தமது தோல்வியை மூடி மறைக்கப் பார்க்கிறார்கள்.

இவர்களைப் போலவே புதுமைப்பித்தனின் கவிதையில் யாப்பிலக்கண அமைதி இல்லை என்பதால், புதுமைப்பித்தனின் கவிதையை 'லகு கவிதை' (Free verse) என்றும், 'வசன கவிதை' என்றும் கூறி, அது தமிழ் மரபுக்கு ஒவ்வாத முயற்சி யென்றும், எனவே அது கவிதையாகாது என்றும் கருதி, அதைப் புறக்கணிக்கிறார்கள். புதுமைப்பித்தனின் கவிதை தமிழ்மரபை மீறிய, புறக்

ளுக்குமாக, ராஜகம்பீரம்போன்ற அந்தஸ்தும் ஸ்தானமும் பெற்று வரும்போது, அதன் வலிவும் வேகமும் சராசரி நிலையைவிட அதிகமாகி விடுகிறது. உதாரணமாக 'பாழ்' என்ற வார்த்தையை எடுத்துக்கொள்ளுங்கள். பாழ் அடைந்த கிணறு என்று கூறும் போது அந்த வார்த்தை சாதாரண அர்த்த பாவத்தோடு ஒரு பொருளை விளக்க உதவுகிறது. ஆனல் அதே வார்த்தையை ஆத்திரத்தில் 'பாழாய்ப்போக!' என்றும், வயிற்றெரிச்சலில் 'பாழாய்ப்போச்சு!' என்றும் பிரயோகிக்கிறேம். ஆத்திரமும் வயிற்றெரிச்சலும் அந்த வார்த்தையைப் பிரயோகிக்கும்போது, ஆத்திரத்தையும் வயிற்றெரிச்சலையும் அந்த வார்த்தை பிரதிபலிக்கும்போது, அதன் வேகம் முதலில் கூறிய உதாரணத்திலிருந்ததை விட, அதிகரிக்கிறது; இரண்டாவது உதாரணத்தில் அதன்வேகம் திமிறிக்கொண்டு வெளிப்படுகிறது. சரி. இதே வார்த்தை ஒரு கவிதையிலே வந்தால் ?

பாட்டைப் பார்க்கலாம் :

**எந்த ஊர் என்றீர் ;**
**இருந்த ஊர் நீர் கேளீர்.**
**அந்த ஊர்ச் செய்தி**
**அறியீரோ ?— அந்த ஊர்**
**முப்பாழும் பாழாய்**
**முடிவி லொரு சூனியமாய்**
**அப்பாலும் பாழ் என்று**
**அறி.**

முதலில் குறிப்பிட்ட வசனச் சேர்க்கைகள் எவற்றிலும் இல்லாத புதிய வேகமும், புதிய பொருளும், புதிய லயமும், புதிய நயமும் பாழ் என்ற அதே வார்த்தைக்கு இந்தப் பாட்டிலே ஏற்பட்டுவிடுவதை நாம் காண்கிறேம். நமது சொல் வழக்கிலேயே நித்த நித்தம் எப்படி யெப்படி யெல்லாமோ பிரயோகித்து பழகிப் பழகி மெருகேறிப்போன ஒரு வார்த்தை கவிதையிலே வரும் போது ஏதோ ஒரு புதிய வார்த்தையைப் போல், புதிய பொரு

லைக் கூறவந்த சங்கேத வார்த்தையைப்போல் நம்மையே பிர மிக்க வைப்பதற்குக் காரணம் என்ன? ஏனெனில் அந்த வார்த்தை கவிதையில் ஒரு உயர்ந்த ஸ்தானத்தை, அந்தஸ்தைப் பெறுகிறது; தன்னுடனே சார்ந்து நிற்கும் பிற வார்த்தைகளின் கூட்டுறவில் தான் மட்டும் பேராட்சி பெறுகிறது. எனவே அதன் சக்தியும் வேகமும் கூடுகிறது; கவிதை என்ற இந்தக் கட்டுக் கோப்பிலிருந்து, அதன் சக்தி பன்மடங்காகத் திமிறி வெளிப்பட்டு வியாபகம் பெறுகிறது.

இப்படிப்பட்ட வேகம் மொழியின் பலதுறை இலக்கியங்களை யும் விட கவிதை இலக்கியத்தில் தான் அதிகப்படியாக, கூடிய பட்ச வலுவோடு பிரதிபலிக்கிறது; அந்த வலு நமது நெஞ்சிலே பதியும் வண்ணம், மனப்பாடம் ஆகும் வண்ணம், பாட்டை உருவேற்றுகிறது. எனவேதான் இலக்கியத் துறைகளில் கவி தைத் துறையே தலை சிறந்ததாக விளங்குகிறது. கவிதைத் துறைக்கு இந்த சக்தியைத் தருவது எது? கவிதைக்கென கவிஞன் கையாளும் இலக்கணம், அதாவது உருவ அமைப்பு ஓரளவு பயன் படுகிறது. பெரும்பாலான பழந்தமிழ்க் கவிதைகள் யாப் பிலக்கண அமைப்புக்குக் கட்டுப்பட்ட உருவ அமைதிகளைக் கொண்டிருப்பதால், இலக்கணத்தையே முதலும் முடிவுமாகக் கொள்ளும் பண்டிதர்கள் இலக்கணக் கட்டுப்பாடு ஒன்றுதான் கவிதைக்குப் பெருவலி தருகின்றது என்று கருதுகின்றனர். இதைப் பின்னர் விளக்கலாம். செய்யுளுக்கு அமைகின்ற இலக் கணம் வசனத்துக்குரிய இலக்கணத்தைவிட, அதிகமான கட்டுப் பாடுகளை, குறுகிய எல்லைகளைக் கொண்டது. எனவே அந்தக் கட்டுப்பாட்டுக்குள்ளிருந்துவார்த்தைகள் திமிறி வெளிப்படும்போது தான் அவற்றுக்கு வேகம் பிறக்கிறது. சதுரங்கம் விளையாடும் போது ஒவ்வொரு காய்க்கும் சில அதிகாரங்களை நாம் வழங்கி அவற்றை ஒரு குறிப்பிட்ட அரங்க எல்லைக்குள் விளையாட விடும் போது, அந்தக் காய்கள் சமயத்துக்குச் சமயம் எப்படி யெப்படிப் புதுப்புது வலிமையையும் முக்கியத்துவத்தையும் பெற்றுச் சிறக்கின் றனவோ அதுபோலவே வார்த்தைகளும் பாட்டின் உருவம் என்ற கட்டுக்கோப்புக் குள்ளிருந்து சிறந்த ஸ்தானங்களைப் பெறும்போது,

அவற்றின் வலுவும் வேகமும் முக்கியத்துவமும் அதிகரிக் கின்றன.

> கல்லை வயிர மணியாக்கல் செம்பைக்
> கட்டித் தங்கமெனச் செய்தல்—வெறும்
> புல்லை நெல்லெனப் புரிதல்—பன்றிப்
> போத்தைச் சிங்க ஏருக்கல்

என்று பாரதி பாடினானே, அது போன்று சாதாரணமான எளிமையான வார்த்தைகளையும் கூட மகத்தானதாக, வலிமை மிக்கதாகச் செய்யும் சக்தியைத்தான் பாட்டு என்ற உருவம் கவிதைக்கு அளிக்கிறது.

'கவிதைக்குரிய உருவ இலக்கணம் கவிதைக்கு வேகம் மட்டும் தான் தருமா? வேகத்தை மட்டுப்படுத்தவும் செய்யாதா?' என்ற கேள்வி சிலருக்கு எழலாம். உவமான பூர்வமாக விளக்க முயல் கிறேன். பாபநாசம் அணைக்கட்டையும், ஒரு மாலுமாரிக் குளத் தையும் எடுத்துக்கொள்ளுங்கள். பாபநாச மலையில் மேலிருந்து பெருகி வரும் வெள்ளம் வேகத்தோடு வருகிறது; பேரளவில் வருகிறது. வருகிற வெள்ளத்தைத் தடுத்து நிறுத்தி, குறுகிய கால்வாய்களின் மூலம் நீரை வெளிவிடுகிறது அணைக்கட்டு. அப் படி, வெளிவரும் நீர் தனது சக்தியையெல்லாம் பிரயோகித்துக் கொண்டு நிமிறி விம்மிப் பாய்கிறது- அதன் அசுரசக்தி ராட்சச வேகத்தில் வெளிப்படுகிறது. அதே சமயம், மாலுமாரிக்குளமும் தன்னிடத்தே வந்து சேரும் நீரை அணை கடந்து விடாமல் அணைத் துச் சுற்றித்தான் வைத்திருக்கிறது. இருப்பினும் அதன் கட்டுக் கிடையானநீரில் பாபநாசமலையின் ராட்சசவேகம் காணப்படுமா? கிடையாது, ஏன்? இரண்டும் நீருக்கு வகுத்த வரம்புகள் தாம் எனினும் ஒன்றில் வரம்பை மீறிக்கொண்டு நீர் வெளிவரத் திமுறுகிறது, மற்றொன்றில் வரம்பையே தொடுவதற்குச் சக்தி யற்று ஆழக்குழியில் நீர் தேங்கிக்கிடக்கிறது. இதைப்போலவே இலக்கணக் கட்டுக்கோப்புக்குள் வரும் வார்த்தைகள் எந்த அள வுக்கு அந்தக் கட்டுக்கோப்புக் குள்ளிருந்து கொண்டு அதிகப்படி

யான சக்தியை வெளியிடுகின்றனவோ அந்த அளவுக்கு அவ் வார்த்தைகள் வேகம் பெறுகின்றன; வலுப்பெறுகின்றன; கவிதை ஆகின்றன. இலக்கணக் கட்டுக்கோப்புக்குள் சிக்கிய பாவத்தைத் தவிர, வேறு ஒன்றுமே அறியாது அப்பாவியாக அடங்கிக்கிடக் கும் வார்த்தைகள் வேகம் பெறுவதில்லை; வலுப் பெறுவ தில்லை; கவிதை ஆவதில்லை.

இரண்டு உதாரணங்கள் :

ஒன்றிரண்டு மூன்றுநான் கைந்தாறு ஏழெட்டு
ஒன்பது பத்துப் பதினொன்று—பன்னி
ரண்டுபதின் மூன்று பதிநான்குபதி னைந்துபதி
னறுபதி னேழ்பதி னெட்டு 1

உருகி உடல் கருகி உள்ளீரல் பற்றி
எரிதவியாது என் செய்வேன் ?—வரியரவ
நஞ்சிலே தோய்ந்த நளினவிழிப் பெண்பெருமாள்
நெஞ்சிலே இட்ட நெருப்பு

இவ்விரு பாடல்களிலு முள்ள வார்த்தைகள் வெண்பா வெனும் கட்டுக்கோப்புக்குள் தான் அடங்கி யிருக்கின்றன. எனி னும் முதற் பாடலில் உயிரில்லை; உணர் வில்லை; வேகமில்லை; அர்த்தம் கூட இல்லை. காரணம், ஒன்றிலிருந்து பதினெட்டுவரை ஒரு பாவிலே வரப்பாடிய இலக்கண வித்தை அது. ஆனால் இரண் டாவது பாடலிலோ உயிர் உண்டு; உணர்வுண்டு; வேகமுண்டு; அர்த்தமும் உண்டு. காரணம், அந்தக் கட்டுக்கோப்பிலிருந்து மீறி அதிலுள்ள வார்த்தைகள் நம் மனத்தில் புதிய வேகத்தைப் பாய்ச்சுகின்றன. எனவே அது கவிதையாக விளங்குகிறது.

ஒரே மாதிரியான கட்டுக்கோப்புக்குள், அதாவது வெண்பா வெனும் யாப்பமைதிக்குள் சிக்கிய இரண்டுவிதமான பாடல்களை உதாரணம் காட்டினோம். அவற்றில் ஒன்று வெறும் இலக்கணப் பந்தலாகவும், மற்றொன்று சிறந்த கவிதையாகவும் விளங்குவதை யும் பார்த்தோம். அப்படியானால், வார்த்தைகள் எப்படிக்

கவிதையாக மாறுகின்றன? அதற்கு இலக்கணக் கட்டுக்கோப்பு எந்த அளவில் துணை செய்கிறது? —என்பதையும் நாம் விசாரணை செய்தால்தான் இலக்கணத்தையே விடாப்பிடியாய்ப் பிடித்துக்கொண்டிருக்கும் நபர்களின் அபிப்பிராயத்தில் தவறு என்ன என்பதைக் கண்டுணரமுடியும்.

"காற்சீர் முச்சீர் நாலில் தனிச்சீர்" ஆகவரும் மேற்கூறிய வெண்பாக் கவிதையையே எடுத்துக் கொள்வோம். சீர் அளவினால் பாட்டிலே தாளலயம் பிறக்கிறது. அந்த லயம் சிறப்பதற்கு எதுகை மோனைகளும் உதவுகின்றன. எதுகைமோனை முதலியவற்றின் தாளலயத்தில் வார்த்தைகள் வலுப்பெறுகின்றன. அந்த வலுவின் காரணமாக, சொல்லவந்த கருத்தின் பாவலயம் கணீரென்று ஒலிக்கிறது. எனவே,

'நஞ்சிலே தோய்ந்த நளினவிழிப் பெண்பெருமாள்'

என்ற அலங்காரச் சிர்களோடு மேளம் கட்டி வரும் மூன்றாவது அடி

'நெஞ்சிலே இட்ட'

என்ற எதுகைத் தொடரை இழுத்து வரும்போது, இரண்டு எதுகைகளும் ஒன்றுக்கொன்று அழுத்தம் கொடுத்து உதவுகின்றன.

கடைசீரான 'நெருப்பு' என்ற வார்த்தை 'நெஞ்சி'லிருந்து பிறந்த அழுத்தவேக மோனை வலுவோடு மத்தாப்பாக விழுந்து முற்றுப்பெறுகிறது. அப்படி முற்றுப் பெறும்போது, நமது மனத்திலே அந்த வார்த்தை கிளப்பிவிடும் உணர்ச்சி அலைகளால் தான், அது கவிதையாக முடிகிறது.

எனவே இலக்கணக் கட்டுக்கோப்பு என்பது கவிஞன் சொல்ல விரும்பும் கருத்தை பாவலயத்தோடும் தாளலயத்தோடும் சொல்வதற்கும், அந்த லயங்களின் மூலம் வார்த்தைகளுக்குத் தனிவேகம் தருவதற்கும் உதவுகிறது; உதவவேண்டும். வேறு மாதிரியாகச் சொன்னால், ஒவ்வொரு வார்த்தையும் அதனதன் அளவில் ஒரு அர்த்தத்தையும் சப்தலயத்தையும் கொண்டது. இந்த அர்த்த பாவத்தைப் பரிபூரணமாக வெளிப்படுத்துவதே பாவலயமாகவும், சப்தலயத்தை வெளிப்படுத்துவதே தாளலயமாகவும்

அமைந்து கவிதை உருவாக வேண்டும். அதாவது 'ரிதம்' என்று சொல்லப்படும் மனோபாவ லஹரியை உண்டாக்கிக் கேட்பவர் உள்ளந் தன்பால் ஈர்த்துக்கொள்வதே கவிதையின் மோஹன ரகசியம்; வசீகரண தந்திரம். எனவே இலக்கணம் என்பது இந்த லயக்கவர்ச்சியை அதிகப்படுத்துவதற்கு உதவ வேண்டுமே தவிர, அதைக் குறைக்கவோ கறைப்படுத்தவோ கூடாது.

இலக்கணம் ஒன்றை மட்டுமே பார்க்கின்றவர்கள் இந்த உண்மையை மறந்து விட்டால், அவர்களால் செய்யுள்தான் இயற்ற முடியுமே ஒழிய, கவிதை இயற்ற முடியாது. மேலும் பண்டைத் தமிழர் கண்டு கூறிய யாப்பிலக்கணம் ஒன்றே கவியுருவத்துக் குரிய இலக்கணம் என்று சொல்ல முடியாது. யாப்பிலக்கணம் சில குறிப்பிட்ட செய்யுள் வகை இலக்கணத்தை மட்டுமே கூறுகிறது; வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா, ஆசிரியப்பா, மருட்பா என்னும் செய்யுள் வகைகளுக்கும், தாழிசை, துறை, விருத்தம் முதலிய பாவினங்களுக்கும் மட்டுமே இலக்கணம் வகுக்கிறது. இந்தப் பாவினங்களைத் தவிர தமிழ் இலக்கியத்தில் பல எண்ணற்ற அரிய கவியுருவங்களும் தோன்றிவந்திருக்கின்றன. அதுமட்டுமல்லாமல், யாப்பிலக்கணத்தில் கூறப்பட்டுள்ள செய்யுள் வகைகளை கவிஞனின் மனோபாவத்துக்குத் தக்கவாறு, பல்வேறு ரூப விலாசங்களோடு தோன்றிச் செழித்திருக்கின்றன. 'விருத்தமெனும் ஒண்பாவில் உயர் கம்பன்' என்று புகழ்பெற்ற தமிழ்க் கவிதையின் சிறந்த புத்திரனான கம்பநாடன் விருத்தத்தைத் தனது மனோபாவத்துக்குத் தக்கவாறு எவ்வெவ்வாறெல்லாமோ பயன்படுத்தி பல கவிதா விகாசங்களை உண்டாக்கியிருக்கிறான். திரிகூட ராசப்பனின் குற்றாலக் குறவஞ்சி, திருக்கச்சூர் நொண்டி நாடகம், அண்ணாமலை ரெட்டியாரின் காவடிச்சிந்து முதலியன அற்புதமான சந்த லயத்தோடு விளங்குகின்றன. இவையெல்லாம் யாப்பிலக்கண அமைதிக்குக் கட்டுப்படவில்லை என்ற காரணத்துக்காக, நாம் அவற்றை ஒதுக்கிவிட்டோமா? ஒதுக்கிவிடத்தான் முடியுமா? எனவே இலக்கணம் என்பது ஆசிரியனுடைய கருத்துக்குப் பலமூட்டும் தன்மையில்தான் இருக்கவேண்டுமே ஒழிய, அவனுக்குத் தடையாக இருக்கக்கூடாது; ஆசிரியனின் மனோபாவத்தைச் சீர்

குலைப்பதாக இருக்கக்கூடாது. அப்படியிருந்தால், ஆசிரியன் தனது மனோபாவனைக்குத் தக்கவாறு இலக்கணத்தை மாற்றியமைத்துக் கொள்வதிலோ, புதிய உருவங்களைச் சமைத்துக்கொள்வதிலோ யாரும் குறுக்கே நிற்கக்கூடாது; நிற்க முடியாது. ஆனால், அப்படி அவன் உருவாக்கித் தருகின்ற உருவம் சந்த லயத்தையும், முக்கியமாக பாவ லயத்தையும் வெளிப்படுத்துவதாக இருக்கவேண்டும். அந்த உருவத்தில் சந்த லயம் பாவ லயத்தைத் தோற்றுவிக்கலாம்; அல்லது பாவலயம் சந்தலயத்தைத் தோற்றுவிக்கலாம்; இந்த இரண்டு லயங்களில் எதை யெதை எப்படி எப்படிக் கையாள வேண்டுமோ அப்படிக் கையாண்டு, கவிதைக்குரிய 'ரிதம்' என்ற பூரண லய லஹரியை வெளிப்படுத்தும் புதிய உருவங்களை உண்டாக்கலாம்.

> வார் என்றால் வர் என்பேன் வான் என்றால் வன்
> நார் என்றால் நர் என்பேன் நான். [என்பேன்

என்று எவரோ நாராயணனை 'நராயணன்' என்று பாடியதைக் கண்டு, காளமேகப்புலவர் கையாண்டு செய்து பாடும் அளவுக்கு, செய்யுள் விகாரங்களுக்கு இடம் கொடுத்து யாப்பமைதியைப் பாதுகாக்க முனையும் தமிழ் இலக்கணம், செய்யுளின் உருவ அமைப்பிலே இலக்கண விகாரமாகப் படக்கூடிய ஒரு சொல் அல்லது தொடர் உண்மையிலேயே பாவலயத்துக்குப் பிரயோஜனப்படக்கூடிய வகையில் அமைந்திருப்பதை அனுமதிப்பதால், ஒன்றும் குடி முழுகிப் போய்விடாது. 'இலக்கணக் கொலை.' என்று சொல்லக்கூடிய ஒரு புதிய கவியுருவம் பாவலயத்தின் சிகரமாக விளங்கினால், அந்தக் கவிதைக்கு அதுவே இலக்கணம் எனக் கொள்ளவேண்டும். எனவே இலக்கணத்தில் சனாதனப் பிரேமை கொண்டு, கவிஞனுக்கோ கவிதை வளர்ச்சிக்கோ விலங்கிட முனைவது தவறு, புதுமைப்பித்தனின் கவிதையில் இலக்கண அமைதி இல்லை என்று சொல்பவர்கள் இந்த உண்மையை மறந்துவிடுகிறார்கள். எனவே தான் அவர்கள் புதுமைப்பித்தனின் கவிதையை 'கவிதை' என்றே ஒப்புக்கொள்ளவும் மறுக்கிறார்கள்; 'வசன கவிதை' என்று தாமும் பேரிட்டு அதை ஒதுக்க முனைகிறார்கள்.

புதுமைப்பித்தனின் கவிதையை 'வசன கவிதை' என்று கூறி ஒதுக்குபவர்களுக்கு மேலே விளக்கம் கூறினேன்; இனி அவரது கவிதையை 'வசன கவிதை' என்று கூறி வரவேற்பவர்களைப் பார்க்கலாம்.

தமிழில் இந்த 'வசன கவிதை' விவகாரம் எப்போது தோன்றியது? எப்படித் தோன்றியது?

தமிழில் 'வசன கவிதை' என்ற இலக்கிய முயற்சியைத் தொடங்கி வைத்துத் தோற்றுப்போன புண்ணியம் மணிக்கொடி பரம்பரை எழுத்தாளர்களைச் சாரும். மேலை நாட்டு இலக்கிய முறைகளைப் பின்பற்றி தமிழில் இலக்கியம் செய்ய முனைந்த மணிக்கொடி எழுத்தாளர்களில் சிலர் சிறுகதை எழுதுவதோடு மட்டும் நின்றுவிடவில்லை. மேலைநாட்டில் புதுமை முயற்சியாகத் தோன்றிய 'Vers Libre' என்னும் வசன கவிதை முயற்சியையும் தொடங்கிவைத்தார்கள். வால்ட் விட்மன், டி. எச். லாரென்ஸ் போன்றவர்கள் ஆங்கிலத்தில் வசன கவிதை எழுதினார்கள். எனினும் வால்ட் விட்மனின் கவிதையை விரும்பிப் படிப்பவர்கள் அதில் அமைந்துள்ள பொருளமைதிக்காகத்தான் படித்தார்களே ஒழிய, அதன் கவிதா மயக்கத்தை உணருவதற்காகப் படித்தார்கள் என்றோ, உணர்ந்தறிந்துகொண்டார்கள் என்றோ சொல்ல முடியாது. ஆங்கிலம் தெரிந்த இலக்கிய கர்த்தாக்கள் இந்த வசன கவிதை முயற்சியில் ஏன் இறங்கினார்கள் என்று பார்க்கலாம்.

'அமெரிக்க நாட்டுப் புதிய பாடல்கள்' என்று மகுடமிட்ட ஒரு நூலுக்கு முன்னுரை எழுதும்போது, டி. எச். லாரென்ஸ் வசன கவிதையைப்பற்றிப் பின்வருமாறு குறிப்பிடுகிறார்:

"ஆனால் நாம் (வசன கவிதைக்கு) எந்தவித இயக்கத்தையும், தாள லயத்தையும் விதிக்க முடியாது. நாம் என்னென்ன புதிய விதிகளை வகுத்தாலும், கண்டுபிடித்தாலும் - அவை யனைத்தும் சாராம்சத்தில் ஒன்றுதான் - அவையனைத்தும் வசன கவிதையைத் திருப்திப்படுத்தத் தவறிவிடும். அவை ஏதாவதொரு விதத்தில் கட்டுப்பாடும், அளவமைதியும் கொண்ட உருவ அமைப்பைத்தான் உண்டாக்கும்.

"வசன கவிதையைப் பற்றி நாம் சொல்லக்கூடியதெல்லாம் வசன கவிதையில் கட்டுப்பாடான கவிதையின் தன்மையே இராது என்பதுதான். அது கிளைவு கூறும் தன்மையைக் கொண்டதல்ல. நாது நைந்திறமையால் சென்றுபோன செய்திகளைப் பரிபூரண எதிரொலி போலத் திருப்பும் தன்மையையும் அது கொண்டதல்ல. அதுபோலவே, நாம் கனவு கண்டு உற்று நோக்கும் எதிர்கால நிகழ்ச்சிகளின் ஸ்படிகத் தெளிவு கொண்ட உருவமும் அல்ல...

"ஆனால், நாம் வசன கவிதையில் காண்பதெல்லாம் அந்த க்ஷணத்தின் புரட்சிகரமான பிறந்த மேனியான காட்சித் துடிப்பைத்தான் காண்கிறோம். செய்யுள் இலக்கியத்தின் அழகிய உருவைச் சிதைத்து, அலங்காரங்களைப் புதிய பண்டம்போல் ஒட்டவைத்துக் காட்டுவதே வசன கவிதை என்று கருதி, பல வசன கவிதைக் கவிஞர்கள் எழுதி வருகிறார்கள். வசன கவிதை என்பது தனக்குத்தானே ஒரு தனித் தன்மையைக் கொண்ட தென்பதையோ, அது ஒரு தாரகையோ, நவ மணியோ அல்ல என்பதையோ, அது இடையின்றி உருவாகும் உருவ அமைப்பு என்பதையோ அவர்கள் தெரிந்து கொள்ளவில்லை. அதற்கு ஆரம்பம் என்ற எல்லைகள் கிடையாது. அதற்கு முடிவு என்று ஒன்றில்லை......"

மேலே காட்டிய விளக்கத்தால் வசன கவிதை என்பது மேலை நாட்டு இலக்கிய கர்த்தாக்கள் பலருக்குமே புரியாத சரக்கு என்ற உண்மை தெளிவாகிறது. அதுமட்டுமல்ல. வசன கவிதைக்கு 'அந்த க்ஷணத்தில்' தோன்றும் உருவ அமைப்புத் தவிர, அதற்கென இலக்கண பூர்வமான உருவ அமைப்பு கிடையாது என்றும் தெரிகிறது. அப்படியானால், வசன கவிதை என்பது என்ன? எழுதுபவன் தன் மனத்தில் தோன்றியதை பட்டை பிடிக்காமல், மெருகு இடாமல், நகாசு அப்பு அடைக்காமல், குறை நிறை நிரவாமல் அப்படியப்படியே பிறந்த மேனியாகப் படைத்து விடுவது என்பதுதான். ஆனால் கவிதை என்பது இதுதானா? உள்ளத்தில் தோன்றும் ஊமைக் கனவுகளை, கற்பனையை, மன உளைச்சலை, மன மகிழ்ச்சியை உருக்கொடுத்து வெளியிட முடியாது தவிக்கும்

மனிதர்கள் நிறைந்த சமூகத்திலே, அவற்றுக்கு ஒரு கலை வடிவம் கொடுத்து, இசைப்பொலிவு அளித்து, உணர்ச்சிகளை எழுத்தோவிய மாகப் பண்ணும் திறமையாளனே கவிஞன் என்ற பெருமையை ஒரு மொழிக்குச் சேர்த்துத் தருகிறது? அப்படியிருக்கும்போது, வசன கவிதை என்ற ரூப அமைதியற்ற முயற்சியால் கவிதை பிறக்குமா? தமிழ் மரபை அறிந்த; தமிழ் இலக்கிய பரிச்சயமும் கொண்ட எவரும் இந்தக் கேள்விக்கு 'பிறக்காது' என்றுதான் பதிலளிக்க முடியும்.

சரி. அப்படியானால், மணிக்கொடி எழுத்தாளர்கள் வசன கவிதை என்று ஏன் ஒன்றை எழுதத் துணிந்தார்கள்? அதற்குப் பல காரணங்கள் உண்டு. மேலை நாட்டு இலக்கியப் புதுமையை நம் நாட்டிலும் உருவாக்க வேண்டும் என்ற நோக்கம் மட்டும் காரணமல்ல. தமிழில் 'வசன கவிதை' எழுதிய எழுத்தாளர் களுக்கு ஆங்கிலத்தில் எவ்வளவு பரிச்சயமும், பயிற்சியும் இருந் ததோ, அந்த அளவுக்குத் தமிழ் உலகம் பண்டுதொட்டுப் படைத்து வந்த இலக்கியங்களிலோ, இலக்கணங்களிலோ கிடையாது. பண்டு தொட்டு வளர்ந்து வந்துள்ள இலக்கிய மரபை அறிந்துணர்ந்து தான் புதிய உருவங்களைச் சமைக்க வேண்டும் என்ற உண்மையை அவர்கள் உணரத் தவறிவிட்டார்கள். அதுமாத்திரம் அல்ல, இலக்கணத்துக்குக் கட்டுப்பட்டு அவர்கள் பாட்டு எழுத விரும்ப வில்லை; இயலவில்லை. இதற்கு 'வசன கவிதை' எழுத்தாளர்கள் எதுகை மோனைகளோடு பாட்டெழுத முயன்ற பல பாடல்களை உதாரணம் காட்டலாம். இலக்கணக் கட்டுக்கோப்புக்குள் குறைந்த அளவுக்கேனும் அடைபட்டு நின்று கவிதை புகல முடி யாத காரணத்தாலும், அவர்கள் 'வசன கவிதை'யைச் சரண் அடைந்தார்கள். மூன்றாவதாக, பாரதியின் கவிதைத் தொகுதியில் காற்று, சக்தி முதலியன பற்றி பாரதி எழுதியுள்ள வசனப் பகு திகள் இடம் பெற்று விட்டதும் ஒரு காரணம் என்று சொல்ல லாம். 'பாரதி கூடத்தான் வசன கவிதை எழுதியிருக்கிறார்' என்று கூறி 'பாரதியின் அடிச்சுவட்டிலே' பாடல்கள் எழுதுவ தாகவும் இவர்கள் பாவனை பண்ணினார்கள்.

பாரதி வசனத்தில் 'கவிதை' எழுதினாரா? இல்லை. பாரதியின்

காவியப் பகுதியில் சேர்க்கப்பட்டுள்ள வசனப் பகுதிகள் உண்மையிலேயே அழகிய வசன இலக்கியம்தான். எனினும் அவை கவிதை அல்ல. பாரதியும் அவற்றைக் கவிதை என்று கூறவில்லை. வடமொழி வேதங்கள், உபநிஷத்துக்கள் முதலியவற்றைப் படித்து அநுபவித்த பாரதி அதிலுள்ள சிறந்த கருத்துக்களை நமக்குப் படைக்க எண்ணியிருக்கிறான். ஆனால், அவற்றின் பூரணப் பொலிவையும், அர்த்த பாவத்தையும் கவியுருவத்தில் கொண்டுவர முனைவதில், பாரதிக்கு தனது திறமையிலும் வாக்கு வன்மையிலும் நம்பிக்கை குறைந்திருக்கக்கூடும். எனவே தான் பாரதி அவற்றை அழகிய வசனத்திலேயே எழுதியிருக்கிறான். இதுதான் உண்மை.

இதைக் கேட்டவுடன் சிலருக்கு பாரதி என்ன அவ்வளவு திறமையற்றவனா என்று எதிர்க் கேள்வி போடத் தோன்றும். மொழியின் தன்மைகளை அறிந்து அதற்குக் கட்டுப்பட்டு, அதன் கூடியபட்ச வேகத்தை எந்த அளவுக்குக் கவிஞன் கொண்டு வருகிறானோ அந்த அளவுக்குக் கவிஞன் வெற்றி காண்கிறான் என்று ஆரம்பத்தில் கூறினேன். அப்படி வெற்றி காண முடியாமற் போகும் நிலைமை எந்தக் கவிஞனுக்கும் ஏற்படக்கூடும். இதற்கு பாரதி மட்டும் விதிவிலக்கல்ல.

உதாரண பூர்வமாகப் பார்க்கலாம்.

பாரதியின் பாஞ்சாலி சபதத்தை எடுத்துக் கொள்வோம். சூழ்ச்சிப் பருவத்தின் கடைப் பகுதியில், பாண்டவர்கள் 'நரி வகுத்த வலையினிலே தெரிந்து விழும் சிங்க'மாகப் பயணமாகிச் செல்கிறார்கள். போகின்ற வழியில் அர்ஜுனன் ஒரு பூம் பொழிலில் அமர்ந்து, திரௌபதியைந் தன் மடிமீது தாங்கிக்கொண்டு, ஏகாந்த இன்பத்தில் திளைத்திருக்கிறான். சூரியாஸ்தமன சமயம். அர்ஜுனன் திரௌபதிக்கு அந்தி வானின் புதுமையை யெல்லாம் வியந்து கூறுவதாகப் பாரதி பாடத் தொடங்குகிறான்.

'பாரடியோ வானத்துப்
புதுமை யெல்லாம்'

என்று தொடங்குகிறது பாட்டு.

"அடிவானத்தே யங்கு பரிதிக் கோளம்
அளப்பரிய விரைவினொடு சுழலக் காண்பாய்
இடிவானத் தொளி மின்னல் பத்துக் கோடி
எடுத்தவற்றை ஒன்றுபட உருக்கி வார்த்து
முடிவான வட்டத்தைக் காளி ஆங்கே
மொய்ந்நுழலாய் சுழற்றுவதன் மொய்ம்பு காணாய்!
வடிவான தொன்றாகத் தகடிரண்டு
வட்ட முறச் சுழலுவதை வலைந்து காண்பாய்!

என்றெல்லாம் அற்புதமான கற்பனையோடு உருவாகிப் பாடல்கள் வருகின்றன. எனினும் இத்தனை திறமை வாய்ந்த பாரதியால், தாம் எடுத்துக் கொண்ட எண்சீர் விருத்த அமைப்பில் (பாடல்கள், 148-151) நாலு பாடல்களுக்கு மேல் பாட முடியவில்லை. எனவே பாரதி எண்சீர் விருத்தத்தைக் கைவிட்டு விட்டு 152-வது பாட்டை அதைவிட எளிமையான இலக்கணம் கொண்ட அகவல் கட்டுக் கோப்பில் தனது கற்பனையைச் சிறைபிடித்து உருவாக்க முயல்கிறான். அதிலும் அவனுக்குப் பூர்ண திருப்தி ஏற்படவில்லை. எனவே யாப்பு முறையையே கைவிட்டு விட்டு, சூரியாஸ்தமனம் பற்றித் தாம் பாடலாக்க விரும்பிய அனுபவத்தை, அந்த அனுபவத்தின் உருவத்தை அதற்குரிய பின் குறிப்புக்களோடு சேர்த்துவிட்டான். பாஞ்சாலி சபதத்தின் இறுதியில் 'சூர்யாஸ்தமனம்' என்ற தலைப்பில் காணப்படும் பகுதி அதையே சுட்டிக் காட்டுகின்றது.

"உலகத்தில் எங்கு பார்த்தாலும் நிறைந்து கிடக்கும் லாவண்யங்களைத் தமிழர்கள் கவனிப்பது கிடையாது. சனிக்கிழமை சாயங்காலம் தோறும் குளக்கரைகளிற் போய்க் கருடன் பார்ப்பதற்கென்றால் நம்மவர்கள் கூட்டங் கூட்டமாக ஓடுகிறார்கள். சூரியாஸ்தமன காலத்தில் வானத்திலே தோன்றும் அதிசயங்களைப் பார்க்க ஒருவன்கூடப் போகிறதில்லை. ஸஹோதரா, சூர்யாஸ்தமனத்தின் விநோதங்களைச் சென்று பார். ஸூர்யனைப் பார்த்தால் கண்ணுக்குக் கெடுதி யென்ற மூடர் நம்பிக்கையைப் பொருட்படுத்தாதே. ஸூர்யனைப் பார்ப்பது பாவமென்று சொல்லும் மூடர் சாஸ்திரத்தைக் கண்கொண்டு பார்க்காதே" என்று பாரதி

எழுதியுள்ள பகுதி, தான் பெற்ற இன்பத்தை இந்த வையகமும் தனது பாட்டுத்திறத்தால் பெற இயலாமல் போகிறதே என்ற அங்கலாய்ப்பில் பிறந்ததுதான் என்பதை நாம் கண்டுணர முடிகிறது.

'வசன கவிதை' இலக்கியகர்த்தாக்களின் இலக்கணப்படி பார்த்தால், பாரதி சூரியாஸ்தமனத்தைப்பற்றி எழுதியுள்ள அழகிய வசனப் பகுதியும் 'வசன கவிதை' தான். ஆனால், பாரதி அந்த 'வசன கவிதை'யை ஏன் 152-வது பாட்டுக்குப் பின்னர் சேர்க்காது, குறிப்புக்களோடு சேர்த்தான்? வசனத்திலே கவிதை பிறக்காது என்ற உண்மை பாரதிக்கு நன்கு தெரியும்; எனவே தான் சூரியாஸ்தமனம் பற்றிய தன் அனுபவத்தைப் பாடலாகவே எழுத முனைந்தான். பாரதி தமிழ் மரபும், தமிழின் கவிதைப் பண்புகளையும் நன்கறிந்தவன். எனவே தான் அவன் தன் 'பாட்டுத் திறத்தாலே இந்த வையத்தைப் பாலிக்க' விரும்பினான்; மந்திரம் போன்று ''தேவ சக்திகளை நம் முன்னே நிலைபெறச் செய்யும் சொல்''லை வேண்டினான். எனவே 'வசன கவிதை' என்பது சப்த ஜாலத்திலும் தான பாவ லயத்திலும் ஊறிப் போன தமிழர் மரபுக்கு ஒவ்வாத விவகாரம்; வெற்றிகாண முடியாத வீண் முயற்சி.

இதனால்தான் வசன கவிதை எழுதி வந்த எழுத்தாளர்கள், புதுமைப்பித்தனின் புதுமுறைக் கவிமுறையை 'வசன கவிதை' என்றுசொல்லி, தங்கள் பாவங்களை மறைக்க முயல்கிறார்கள்.

இவர்களுக்கெல்லாம் புதுமைப் பித்தன் 'பாட்டும் அதன் பாதையும்' என்ற கட்டுரையில் தாமே பதிலுரைக்கிறார்:

* ''யாப்பு முறையானது பேச்சு அமைதியின் வேகத்திற்கு அழுத்தம் கொடுக்கும் ஒரு முறையே. மொழிப் பேச்சு முறைக்குப் புறம்பான ஒரு தன்மையைச் சிருஷ்டித்து வார்த்தைகளைக் கோப்பதல்ல. வசனம் சமயத்தில் பேச்சு முறைக்குச் சற்று முரணான வகையில் கர்த்தாவைக் குறிப்பிடுவதற்குப் பதிலாக, செயலை விளக்கும் வினை அடையாளமும் பொருந்த பின்னிக் கிடந்து, வார்த்தைகளை அதன் பொருள் இன்னது என்று விலக்கிட்டு நிறுத்தும். அதாவது சட்ட ரீதியான தத்துவ ரீதியான விஷயங்களைப்பற்றி விவாதங்கள் நடத்தும் பொழுது வார்த்தைகளின் பொருட் திட்

* புதுமைப்பித்தன் கட்டுரைகள்—பக்கம் 76—77.

வந்தான் காண்
வந்தது போல்
போனான் காண் என்று
புலம்பாதீர்
அத்தனையும் வேண்டாம்
அடியேனை விட்டு விடும்.

இந்தப் பாடல் பகுதியிலும் சில புதிய ரூப அமைதிகளைக் காண்கிறோம். 'இத்தனைக்கும்' என்று வல்லின எதுகையோடு அழுத்தமாகத் தொடங்குகின்ற வரி 'செத்ததற்கு' என்ற மறு வெதுகையில் மேலும் வலுப்பெற்று ஓங்குகிறது. ஆனால், 'செத்த தற்கு' என்ற எதுகைக்கு 'கிட்டாதீர்' என்ற வார்த்தை மோனை யாக அமைந்தபோதிலும், அடுத்து வரும் வரி 'நிதிகள்' என்ற வார்த்தையை யொட்டி அதையே எதுகையாகக்கொண்டு, 'நினைவை' என்று எழுகின்றது. இந்தப் புதுமையை அடுத் தொடர்ந்து வரும் அதிகப்படியான வார்த்தைகளின் பாவ லயம் மூடி மறைத்து விடுகின்றது. அதுபோலவே 'வானத்து' என்ற வார்த்தைக்கு அதற்கடுத்த நாலாவது வரியில்தான் 'போனான்' என்ற எதுகை பிறக்கிறது; அடுத்து 'அத்தனையும்' என்ற சொல் எழும்போது, 'இத்தனைக்கும்' என்று முதலில் எடுத்த எடுப்புக்கு ஒரு முடிப்பு வழங்கும் முத்தாய்ப்பு எதுகையாக அது அமைந்து கவிக்கு அசாதாரண அழுத்தம் தருகிறது. இல்லையா?

இதுபோன்று புதுமைப்பித்தனின் மனோபாவனைக்குத் தக்க வாறும், எடுத்துக்கொண்டுள்ள பாவலயத்துக்குத் தக்கவாறும் உருவ அமைப்புக்கள் பல்வேறு லயவின்னியாசங்களைப் பரிமாறு வதை, அவரது கவிதைகளைத் திரும்பத் திரும்ப வாய்விட்டுப் படித் தால், நீங்கள் அனைவருமே உணர்ந்து கொள்ள முடியும். 'நாழி முகு வாது நானாழி' என்பது அனுபவ வாக்கியம். புதுமைப்பித்தனின் கவிதையின் ரூப நயங்களை யெல்லாம் என்னால் இந்த முன்னுரை யில் முழுதும் கூறிவிட முடியாது. புதுமைப்பித்தனின் புதிய முறைக் கவிதையை அனுபவிப்பதற்கு இந்த முன்னுரையில் கூறி யுள்ள கருத்துக்கள் ஓரளவு வாசகர்களுக்கு உதவும் என்றே நம்புகிறேன்.

இந்த முன்னுரையில் நான் புதுமைப்பித்தன் கவிதை எழுதுவதற்கு எடுத்துக்கொண்ட உருவ அமைப்பையும், அது சம்பந்தப்பட்ட சில கருத்துக்களையும் தான் கூற முனைந்தேனே தவிர, அவர் எடுத்தாண்ட கருத்துக்களைப்பற்றி நான் இங்கு எதுவும் கூறவில்லை. அவற்றை வாசகர்களின் மனோபாவத்துக்கும் பக்குவத்துக்கும் ரசனைக்குமே விட்டு விடுகிறேன்.

இந்தக் கவிதைத் தொகுதியை உருவாக்குவதில் எனக்கு உதவி புரிந்த நண்பர்களுக்கு நான் நன்றி செலுத்துகிறேன்.

ஒன்று சொல்ல மறந்தே போய்விட்டேன். ‘புதுமைப்பித்தன்’ எப்போது கவிதை எழுதினார் என்ற வியப்பு யாருக்கேனும் ஏற்படுகிறதா? அப்படியானால் சொல்லிவிடுகிறேன். வேலூர். வெ. கந்தசாமிப் பிள்ளை என்ற பெயரில் கவிதை எழுதிவந்த அதே நபர் தான் ‘புதுமைப்பித்தன்!’

நெல்லை.<br>
ஜூன் 1954.

**ரகுநாதன்.**

# நிசந்தானோ சொப்பனமோ!

## 1

பட்டமரம் தழைக்க,
பைரவியார் சன்னிதியில்
வெட்டெருமை துள்ள,
விளக்கெடுக்க,

வட்டமுலை மின்னார்
வசமிழந்த காமத்தால்,
நீலமணி மாடத்து
நெடியதொரு சாளரத்தைத்
தொட்டுத் தடவிவந்து
தோயும்நிலாப் பிழம்பை,
எட்டி, எடுத்து;—
இடைசுற்றிச் சேலையென
ஒல்கி நடப்பதாய்
உவமை சொல,

நோட்டெழுத, சீட்டெழுத
நூறுநுணுப் பேய்விரட்ட,
உடுக்கடித்து—
உள்ளத்தனல் அடிக்கும்
கடுப்புக் கதைசொல்ல,

காவிரியின் வளமை சொல,
வடுப்படாக் காதல்
வானுலகத் தெழில்படர,
பூவிரிந்த பந்தரிலே
புது மணத்தின் தேன் நுகர,

சித்தம் பரத்துச்
சிவனுர் நடங்கூற,
வத்திவச்சுப் பேச,
வாய்ப்பந்தல் தானெடுக்க,

செல்லரித்த நெஞ்சின்
சிறகொடிந்த கற்பனைகள்
இடுப்பொடிந்த சந்தத்தில்
இடறிவிழும் வார்த்தைகளில்
ஊரில் பவனிவர;
உவப்புடனே நீயிருந்து

முத்தமிழை—
பாலித்து, பயிராக்கி,
பசிய உயிர் தான் தோன்ற
வளர்த்து வரும் வார்த்தை
நிசந்தானே ?

சத்தியமாய்க் கேட்கின்றேன்
சரஸ்வதியே நிசந்தானே ?

## 2

கள்ளம் விளைந்த களர்
கனியா மோ ? காவியங்கள்,
தொன்னைக் கதை சொல்லி
நோஞ்ச நடை பயின்று
உன்னை வணங்கிடுமோ ?
ஒரு வார்த்தை,

நேசமாகக் கேட்கின்றேன்
ஒரு வார்த்தை !

துச்சா சனனுரிந்த
துகில் என்ன சருகென்ன,
தொட்டுரிய, தொட்டுரிய,
தோன்றாத சூனியமாம்
ஒன்று மற்ற பாழ் வெளியை
உள்ளடக்கும்
வெங்காயம் போல்
விகற்ப உலகமென
வித்தகர்கள் சொல்வதுபோல்,

நீயுமிருத்தல், நினைவணங்கே,
நிசந்தானோ ?

நீயுமிருத்தல் நிசந்தானோ ?

உள்ளத்து ஊஞ்சலினை
உந்தி உவகை துள
சிந்தும் சிரிப்பெல்லாம்
சொப்பனமோ ? சிரிக்காதே,
சிந்தும் சிரிப்பெல்லாம்
சொப்பனமோ ?

# ஓடாதீர்

1

ஓகோ, உலகத்திர்,
ஓடாதீர்!
சாகா வரம் பெற்ற,
சரஸ்வதியார் அருள்பெற்ற
வன்னக் கவிராயன்
நானல்ல.
உன்னிப்பாய் கேளுங்கள்,
ஓடாதீர்!
வானக் கனவுகளை
வக்கணையாச் சொல்லும்
உண்மைக் கவிராயன்
நானல்ல.
சத்தியமாய்ச் சொல்லுகிறேன்;
சரஸ்வதியார் நாவினிலே
வந்து நடம்புரியும்
வளமை கிடையாது!

## 2

உம்மைப்போல் நானும்
ஒருவன காணீ ;
உம்மைப்போல் நானும்
ஊக்கம் குறையாமல்
பொய்கள் புனைந்திடுவேன்
புளுகுகளைக் கொண்டும்மை
கட்டி வைத்துக் காசை,
ஏமாந்தால்,—
கறந்திடுவேன்.
ஊருக்கு மேற்கே
ஊருணியில் கண்டவளை
ஆருக்கும் வாய்க்கா
அரம்பை என்று,
கனவென்று,
சொல்லில் வனைந்திடுவேன் ;
சோற்றுக்கு அலைக்காதீர்.
"கன்னி எழில் வேண்டாம் ;
காதல் கதை வேண்டாம் ;
சொன்னபடி, தேச
பக்தி எழுப்பிடுவாய்,"—
என்றக்கால்,
"அப்படியே, ஆமா
அடியேன் இதோ" என்று
கல்லும் உயிர் பெற்று
காலன் போல், நடமாட,
"வெல்லு, வெல்லு" என்று குத்தும்
விருப்புத்தார்க்குச்சி

